ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸூதகமும் ஆசௌசமும்

[பிறப்பு-இறப்பு முதலான தீட்டுகளை பற்றிய புத்தகம்]

**இலவச இணைப்பு - நந்தன வருட காரிமாறன் தர்சன நாட்குறிப்புடன் மட்டும்**




**காரிமாறன் கலைக்காப்பகம்**

1, தேரடி தெரு,

திருவல்லிக்கேணி, சென்னை - 5.

போன் : 044-2844 0009

ஒரு மூல புருஷனிடமிருந்து பிரிந்து வந்த ஏழு தலைமுறை வரையில் உள்ளோர் பங்காளிகள் எனப்படுவர். தாயாதி, ஸபிண்டர் எனவும் கூறப்படுவர். அவர்களுக்குள் ப்ரஸவத்தினால் உண்டாகும் தீட்டு சூதகம் எனப்படும். ஒருவன் இறந்ததனால் உண்டாகும் தீட்டு ஆசௌசம் எனப்படும். சூதக காலத்திலும் ஆசௌச காலத்திலும் ஸ்நாநம், ஸந்த்யாவந்தனம் தவிர வேறு ஒரு காரியமும் செய்யலாகாது.

சூதகம் தெரியாவிடில், அதனால் யாதொரு குற்றமுமில்லை. இறந்த தீட்டு சில காலம் வரை தொடர்ந்து இருக்கும். அத்தகைய தீட்டு பித்ரு மாத்ரு ச்ராத்தம் முதலியவை நேரும்போது, அப்படி இறந்த விஷயம் காதில் விழுந்தால், அதற்காக ஏற்பட்ட நாட்கள் வரை ஆசௌசம் காத்து, பிறகே ச்ராத்தம் செய்ய வேண்டும். இல்லையேல் செய்யும் ச்ராத்தம் வீணாகும். இது "வைத்யநாத தீக்ஷிதீயம் ஆசௌசகாண்டம்", என்னும் நூலிலிருந்து எழுதப்பட்டது.

## ஸூதகம்

க்ஞாதிகளில் ஒருவருக்குப் பிள்ளை பிறந்தால் பங்காளிகள் அனைவருக்கும் பத்து நாள் தீட்டு உண்டு. அதனிடையில் செய்ய வேண்டிய ச்ராத்தம் வந்தால் பதினோராவது நாளில் அந்தத் தீட்டுப் போன பிறகு ச்ராத்தம் செய்ய வேண்டும். பெண் குழந்தை பிறந்தாலும் கீழ்க் கண்டவர்களுக்கு மாத்திரம் பத்து நாள் தீட்டுண்டு.

1. சிசுவின் ஸஹோதரர்கள்.
2. மூத்தாள் அல்லது இளையாள் வயிற்றில் பிறந்த சகோதரர்கள்.
3. சகோதரர்களுடைய மனைவிகள்.
4. தந்தை, சிறிய தந்தை, பெரிய தகப்பன்.
5. பெரிய தகப்பன் பிள்ளை, பின்னோதர பெரிய தகப்பன், சிறிய தகப்பன்.
6. தாத்தா (பிதாமஹர்) தந்தையின் தந்தை.
7. பிதாமஹரது சகோதரர்கள்.
8. பிதாமஹருடைய பின்னோதர ஸஹோதரர்கள்.
9. அவர்கள் மனைவிகள் ஆகிய அனைவர்க்கும் பத்துநாள் தீட்டுண்டு.

பிரஸவித்தவளின் தாய் தந்தைக்கு மூன்று நாள் தீட்டு. பெண்கள் பெற்றோர் வீட்டில் பிரஸவித்தாலும், பெற்றோரது

பொருள் செலவினால் பிரஸவித்தாலும் பெற்றோர்க்கு மூன்று நாள் தீட்டு உண்டு.

## பிரஸவத்தில் ஒருநாள் தீட்டு

ஸஹோதரன், சிறிய தகப்பன், பெரிய தகப்பன், அம்மான், முதலிய உறவினர் வீட்டில் பிரஸவித்தாலும், அவர்களது பொருள் செலவினால் வேறு எங்கு ப்ரஸவித்தாலும் அவர்களுக்கு ஒரு நாள் தீட்டு உண்டு.

ப்ரம்மசாரிகளுக்கும், உபநயனம் ஆகாதவனுக்கும், கன்யாபெண்களுக்கும் எந்தத்தீட்டுமில்லை.

பிரஸவித்த தீட்டைப்பத்து நாட்களுக்குப் பின் எவரும் காக்க வேண்டியது இல்லை

பிரஸவித்தவளுக்கு ஆண் குழந்தையானால் முப்பது நாட்களும், பெண்குழந்தையானால் நாற்பது நாட்களும் தீட்டுண்டு.
அந்நாட்கள் சென்றபின் புதிதாக மாங்கல்யக்கயிறு தரித்து பஞ்சகவ்யம் சாப்பிட்டு, அதன் பின்பே பாத்ரங்களையும் பிறரையும் தொடுவதற்குத் தக்கவள் ஆவாள். பாண்டஸ்பர்சம் எனப்படுமது.

பஹிஷ்டையானவள் (தூரமானவள்) வீட்டுக்கு வெளியே விலகி இருந்து, நாலாவது நாள் ஸங்கவ காலத்தைத் தாண்டி (சுமார் 8.30 மணிக்கு மேல்) குளத்தில் அமிழ்ந்து ஒரே மூச்சில் இருபத்து மூன்று முறை ஸ்நானம் செய்ய வேண்டும். சூர்யோதய காலத்திற்கு முந்தியோ, சூர்யோதயமானவுடனேயோ ஸ்நானம் செய்தால் தீட்டுப்போவது இல்லை. லௌகிக சௌகர்யத்தை உத்தேசித்து அங்ஙனம் காலையில் ஸ்நானம் செய்ய நேர்ந்தால் எட்டரை மணிக்கு மேல் அன்றைக்கே மற்றொருமுறை ஸ்நானம் செய்தால் தான் சுத்தி ஏற்படும். நான்காவது தினத்திலும் சிறிது தீட்டு இருக்கும். ஆனதால் தேவபித்ரு காரியங்களில் ஸம்பந்தப்படக்கூடாது. ஐந்தாவது நாள் ஸ்நானம் செய்த பின்பே ஸகல கர்மாக்களையும் செய்ய யோக்யதை உண்டு. பஞ்சாக்ஷரீ சூரிய நமஸ்காரம் முதலியவைகளையும் ஐந்தாவது நாள் முதலே செய்ய வேண்டும்.

## பத்துநாள் ஆசௌசம்

ஒரு க்ஞாதி இறந்தால் ஏழு தலைமுறையில் உள்ள அனைவருக்கும் பத்து நாள் தீட்டு உண்டு. அவர்கள் ஸபிண்டர் எனப்படுவார்கள். பிறந்த பத்து நாட்களுக்குப் பிறகு புருஷ குழந்தை இறந்தாலும், அதே போல விவாகம் ஆகும் வரை பெண் குழந்தை இறந்தாலும் கீழ்க்கண்டவர்களுக்கு மாத்ரம் பத்து நாள் தீட்டு உண்டு.

1. இறந்தவர் தந்தை,
2. இறந்தவர் தாய்,
3. இறந்தவர் சகோதரர்
4. இறந்தவரது பின்னோதர சகோதரர்.

ஏழு வயதிற்குள் உபநயனமாகி தாயாதிகளின் புத்ரர் இறந்தால் எல்லோருக்கும் பத்து நாட்கள் தீட்டுண்டு. ஏழு வயது முதல் உபநயனம் ஆனாலும் ஆகாவிட்டாலும் புருஷக் குழந்தை இறந்தால் க்ஞாதிகளுக்குப் பத்து நாள் தீட்டு உண்டு.

## புருஷரில் மூன்று நாள் தீட்டுள்ளவர்.

1. மாதாமஹர்- தாயின் தந்தை
2. மாதாமஹீ- தாயின் தாய்
3. மாதுலன்- மாமன்
4. மாதுலானீ- மாமன் மனைவி
5. மாமனார்.
6. மாமியார்
7. தாயின் சகோதரிகள்- சித்தி, பெரியம்மாள்.
8. தந்தையின் சகோதரிகள்-அத்தைமார்கள்
9. சகோதரியின் உபநயமான புத்ரன் - மருமகன்
10. உபநயனமான தௌஹித்ரன்- பெண்ணின் பிள்ளையான பேரன்.
11. ஏழு தலைமுறைதாண்டிய பங்காளிகள் - ஸமானோதகர்.
12. கல்யாணமான பெண்
13. கல்யாணமான சகோதரி.
14. ஜனனீ-அன்ய கோத்ரத்தில் ஸ்வீகாரமாகச் சென்றவளுக்கு முன் கோத்திரத்தில் தன்னைப் பெற்றெடுத்த தாய் ஜனனீ.
15. ஜனகபிதா- ஸ்வீகாரமானவனது பூர்வகோத்ர தந்தை.
16. தத்தபுத்ரன்- அன்யகோத்ர ஸ்வீகாரமானவன்.

17. ஏழு வருஷம் முதல் விவாஹமாகும் வரை உள்ள பத்துநாள் தாயாதியின் பெண்.

18. இருபத்தைந்தாவது மாதம் முதல் ஆறு வருஷம் வரை பூணூல் போடாத க்ஞாதிகளின் பிள்ளைகள்.

19. ஏழு தலைமுறைக்கு மேற்பட்ட க்ஞாதிகளின் பிள்ளை உபநயனமானாலும், ஆகாவிட்டாலும், ஏழுவயதுக்குள்ளேயே உபநயனம் ஆகியிருந்தாலும் மூன்று நாள் தீட்டு உண்டு.

## தனியாகப் பெண்களுக்கு மாத்ரம் உள்ள மூன்று நாள் தீட்டு

ஒரு பெண் விவாகம் ஆகும் பொழுது புருஷ கோத்ரத்தில் ஈடுபடுகிறாள். புருஷனது க்ஞாதிகளைச் சார்ந்த சூதகமும் ஆசௌசமும் (பிறப்பு, இறப்புத் தீட்டும்) புருஷனைப் போலவே பத்து நாள் அல்லது மூன்று நாள் அவள் தீட்டுக் காக்க வேண்டும். தான் பிறந்த கோத்ரத்தைச் சார்ந்த க்ஞாதிகளின் தீட்டு இவளுக்குக் கிடையாது என்றாலும் நெருங்கிய ரத்த ஸம்பந்தமுள்ள கீழ்க்கண்டவர்களைநாடி மூன்றுநாள் தீட்டுக்காக்க வேண்டும். புருஷனுக்கு உண்டான தீட்டு மனைவிக்கு ஸஹஜமாக வரும். மனைவிக்குத் தனியாக உண்டான தீட்டு புருஷனுக்கு இல்லை.

1. உபநயனமான உடன் பிறந்தான்.
2. உபநயனமான மருமான்
3. உபநயனமான சகோதரியின் பிள்ளை.
4. ஸபத்னீ மாதா அல்லது தனது தாயாரின் இளையாள், அல்லது மூத்தாள் ஆகிய இவர்கள் இறந்தால் மூன்று நாட்கள் பெண்களுக்குத் தனியாகத் தீட்டு உண்டு.

## புருஷர்களுக்கு பக்ஷிணீ தீட்டு (1 1/2 நாள்)

பக்ஷிணீ என்பது ஒன்றரை நாள். அதாவது இரண்டு இரவும் ஒரு பகலும், அல்லது இரண்டு பகலும் ஓர் இரவும் உள்ள காலம். பகலில் உண்ணாமலிருந்தால்தான் பக்ஷிணீ தீட்டு இரவில் அகலும்.

பகலில் சாப்பிட்டால் மறுநாள் காலையில் தான் போகும்.

1. அத்தையின் பிள்ளைகளும் பெண்களும்.
2. மாமன் பிள்ளைகளும் பெண்களும்.

3. தாயின் சகோதரியான சிற்றன்னை, பெரியன்னை இவர்களின் பிள்ளைகளும் பெண்களும்.
4. தன் சகோதரனுடைய கல்யாணமான பெண்.
5. தன் சகோதரியின் பெண்.
6. சிற்றப்பன் பெரியப்பன் பெண்.
7. தன் பிள்ளையின் பெண்- பௌத்ரீ.
8. தனது பெண்ணின் பெண்-தௌஹித்ரீ.
9. உபநயனமாகாத தௌஹித்ரன்- பெண்ணின் பிள்ளை.
10. உபநயனமாகாத மருமான்- சகோதரியின் புத்ரன்.

## பெண்களுக்கு பக்ஷிணீ தீட்டு (1 1/2 நாள்)

1. தந்தையுடன் பிறந்த சிற்றப்பன், பெரியப்பன்.
2. தன் தாயுடன் பிறந்த சித்தி - பெரியம்மாள்.
3. மாமன். 4. அத்தை.
4. மேற்கூறப்பட்ட நால்வருடைய பெண்களும், பிள்ளைகளும்.
5. தந்தயின் தந்தை- பிதாமஹன்
6. தந்தையின் தாய்- பிதாமஹி
7. தாயின் தந்தை- மாதாமஹன்.
8. தாயின் தாய்- மாதாமஹீ
9. தன்னுடன் பிறந்தவள்- ஸகோதரி.
10. ஸகோதரியின் பெண்.
11. மருமான்.

ஆகிய இவர்கள் இறந்தால் ஸ்திரீகளுக்கு ஒன்றரைநாளான பக்ஷிணீ தீட்டுண்டு.

## ஒரு நாள் தீட்டு புருஷர்களுக்கு

1. ஸபத்னீமாதாவின் சகோதரன், சகோதரி, பெண்.
2. மேற்கூறப்பட்ட மூவருடைய பெண், பிள்ளை.
3. தன் மனைவியின் சகோதரர்கள்-மைத்துனர்.
4. தன் தாயின் மூத்தாள் அல்லது இளையாளுடைய பெண். பின்னோதர சித்தப்பா, பெரியப்பாபெண்.
5. ஸபத்னீமாதாவின் தாய், தந்தை.
6. இரண்டு வயதுக்குமேல் ஆறு வயது வரை கல்யாணம் ஆகாமல் இறந்த க்ஞாதிகளின் பெண்.
7. ஸ்வீகாரம் சென்றவனுடைய பூர்வ கோத்ர ஸகோதரர்.
8. பத்னியும் இறந்து அவள் ஸந்ததியுமில்லாதபொழுது அவளது தந்தையும் தாயுமான மாமனார் மாமியார் ஆகியவர் இறந்தால் ஒரு நாள் தீட்டு.

9. ஆறுமாதத்திற்குமேல் இரண்டு வருஷத்திற்குட்பட்ட சௌளம் ஆகாத பங்காளிப்பிள்ளை இறந்தால் ஒரு நாள் தீட்டு உண்டு.

## ஸ்திரீகளுக்குத் தனியாக ஒரு நாள் தீட்டு

1. ஸபத்னீமாதா- தாயின் மூத்தாள் அல்லது இளையாள் புத்ரன்.
2. ஸபத்னீமாதா புத்ரீ, ஸகோதரி, ஸகோதரன்.
3. ஸபத்னீமாதாவினுடைய பிள்ளையினுடைய பிள்ளை, பெண்.
4. ஸபத்னீமாதாவின் புத்ரியின் பிள்ளை, பெண்.
5. ஸபத்னீமாதாவின் சகோதரியின் பிள்ளை பெண். இவர்களில் விவாகமான பெண்களுக்கும், உபநயனமான பிள்ளைகளுக்குமே தீட்டு.

## இரண்டு பிறப்புத்தீட்டுகள் சேர்ந்தால்

1. ஒரு பத்து நாள் தீட்டு காத்துக் கொண்டிருக்கும் போது (4வது நாள் 5வது நாள் அல்லது மற்ற நாட்களில்) மற்றொரு பத்து நாள் தீட்டு வந்தால், முதலில் காத்துக் கொண்டிருக்கும் தீட்டுப் போகும் தினத்திலேயே இரண்டாவது தீட்டும் போய்விடும். இது க்ஞாதிகளுக்கு மட்டும் தான். இரண்டாவது தீட்டுப் போகும் வரை காக்க வேண்டாம். பெற்றோர்களுக்கு பத்து நாள் தீட்டு உண்டு.
2. ஒரு மூன்று நாள் தீட்டு காத்துக் கொண்டிருக்கும் பொழுது இரண்டாவது மற்றொரு மூன்று நாளைய தீட்டு வந்தால் முதல் தீட்டுடன் அந்தத் தீட்டும் போய் விடும். (அகலும்)
3. மூன்று நாள் தீட்டு காத்துக் கொண்டிருக்கும் பொழுது நடுவில் பத்துநாள் தீட்டு வந்தால் முன் சொன்னபடி மூன்று நாள் தீட்டுப் போகும் பொழுது பத்து நாள் தீட்டுப் போகாது. அதிக நாளும் காக்க வேண்டும்.
4. பத்து நாள் தீட்டு காத்துக் கொண்டிருக்கும் போது இடையில் மூன்று நாள் தீட்டு வந்தால் பத்து நாள் தீட்டு போகும் போது தான் சுத்தி ஏற்படும். மூன்று நாள் தீட்டு அகலும் தினத்தில் பத்து நாள் தீட்டு அகலாது.
5. பத்து அல்லது மூன்று நாள் தீட்டு காத்துக்கொண்டிருக்கும் பொழுது ஒருவருக்குக் குழந்தை பிறந்தால் பெற்றோருக்குப் பத்து நாள் தீட்டுண்டு.
6. பத்து நாள் தீட்டு காத்துக் கொண்டிருக்கும் பொழுது பத்தாவது நாள் இரவில் மற்றொரு பத்து நாள் தீட்டு வந்தால் ,

அதிகப்படியான பத்து நாளைய தீட்டிற்காக மூன்று நாள் தீட்டு காக்க வேண்டும்.

7. ஒருவருக்குக் குழந்தை பிறந்து பத்து நாள் தீட்டு காத்துக் கொண்டிருக்கும் பொழுது பத்தாவது நாள் மற்றொரு பிறப்புத்தீட்டு எப்பொழுது வந்தாலும் பதினோராம் நாளே தீட்டுப் போய் விடும். முன் கூறியபடி மூன்று நாள் இவர்கள் தீட்டுக் காக்க வேண்டியதில்லை.
8. ஒரு பத்து நாளைய தீட்டு காத்துக் கொண்டிருக்கும் பொழுது, இந்தத் தீட்டு ஆரம்பிப்பதற்கு முன்னமேயே ஒரு க்ஞாதி வீட்டில் ப்ரஸவம் ஏற்பட்டு அதுவும் பத்து நாளைய தீட்டாக இருந்து, நாலு அல்லது ஐந்து நாட்கள் கழித்து நமக்குத் தெரிந்தால், அந்தப் பழைய தீட்டுப் போகும் பொழுது புதிதாக வந்த தீட்டும் போய்விடும்.
9. ஒருவருக்கு இரட்டைக் குழந்தை ஒரே நாளில் பிறந்தால் முன் கூறிய படியே தீட்டு. அதில் விசேஷமில்லை. ஆனால் ஒரு குழந்தை முதல் நாளும் மற்றொரு குழந்தை மறு நாளும் பிறந்தால், முதல் குழந்தை பிறந்த பதினோராவது நாளிலே பங்காளிக்கும், குழந்தையின் தந்தைக்கும் தீட்டுப் போகும். தந்தை பத்தாவது நாளிலே க்ஷவரம் செய்து கொண்டு தீஷாநிவிருத்தி செய்ய வேண்டும். பெற்ற தாய்க்கு மாத்திரம் இரண்டாவது குழந்தை பிறந்த பதினோராவது நாளே அதாவ்து பன்னிரண்டாவது நாளே தீட்டு அகலும்.

## மரண ஆசௌசமும் பிறப்புத்தீட்டும்

1. மரணத்தால் ஏற்படும் தீட்டே தீட்டுக்களில் பலமானது. பிறப்புத்தீட்டின் நடுவில் மரணத்தீட்டு வந்தால், பிறப்புத் தீட்டுடன் மரணத்தீட்டு போகாது.
2. மரணத்தீட்டு காத்துக் கொண்டிருக்கும் பொழுது பிறப்புத்தீட்டு வந்தால் மரண ஆசௌசத்துடன் இதுவும் நீங்கி விடும்.
3. ஆனால் ஒருவருக்குக் குழந்தை பிறந்து தீட்டுக் காத்துக்கொண்டிருக்கும் பொழுது க்ஞாதியிந்தாய் தந்தை இறந்த மரண ஆசௌசம் தோன்றினால் இவர்களுக்கு மாத்ரம் பிறப்புத்தீட்டுடன் அந்த மரணத்தீட்டும் போய்விடும். இது விசேஷமான அம்சமாகும்.
4. ஒரு பெற்றோருக்குக் குழந்தை பிறந்து தீட்டுக் காத்துக் கொண்டிருக்கும் பொழுது அந்தக் குழந்தை பத்துநாட்களுக்குள் இறந்து விட்டால் அந்த மரணத்திற்காகத் தனித் தீட்டுக் கிடையாது.பிறந்த பத்தாவது நாளிலேயே இரண்டும் அகலும். (பத்தாவது நாளில் 2 நாள்)

5. பத்தாவது நாள் இரவு கடைசி நேரத்தில் இறந்தால் பெற்றோருக்கும் மூன்று நாள் அதிகத்தீட்டு உண்டு.
6. க்ஞாதிகளுக்கு இந்த அதிகப்படியான மூன்று நாள் தீட்டு கிடையாது.
7. பங்காளி ஒருவர் இறந்ததால் உண்டானதீட்டு காத்துக்கொண்டிருக்கும் பொழுது ஒருவள் ப்ரஸவித்தால் க்ஞாதிகளுக்கு அந்த மரண ஆசௌசத்துடன் பிறந்த தீட்டும் போய்விடும்.
8. பெற்றோருக்கு மாத்திரம் பிறந்த தீட்டு பதினோராவதுநாளில் தான் போகும்.
9. ஒருவரது தாய் தந்தை இறந்து மரண ஆசௌசம் காத்துக்கொண்டிருக்கையில் அவருக்கே குழந்தை பிறந்தால் பெற்றோரின் மரண ஆசௌசம் அகலும் பொழுது ப்ரஸவத்தீட்டும் போய்விடும்.
10. ஆனால் பெற்ற தாய்க்கு மாத்ரம் பதினோராவது நாள் தான் ஜனனத்தீட்டு அகலும்.
11. இரண்டு தீட்டுகளும் சமமாக அதாவது பத்து பத்து நாள் தீட்டாக இருந்தாலும் அல்லது சிறிது அல்பமாக இருந்தாலும் மரண ஆசௌசத்துடன் ஜனன ஆசௌசம் நீங்கி விடும்.
12. மரண ஆசௌசம் காக்கும் க்ஞாதிக்குப் பத்து நாட்களுக்குள் அந்தக் குழந்தை இறந்தால் மரணத்திற்காக அதிகப்படி தீட்டுக்கிடையாது. இந்த ஜனனத்தீட்டுடன் அந்தத் தீட்டும் போய் விடும்.

## <u>ஒரு மரண ஆசௌசத்தில் மற்றொரு மரண ஆசௌசம்</u>

1. பத்து நாள் தீட்டில் வேறொரு பத்து நாள் தீட்டு வந்தால் முந்திய தீட்டோடு பிந்திய தீட்டும் போய் விடும்.
2. மூன்று நாள் தீட்டில் பத்து நாள் தீட்டு வந்தால் , பத்து நாள் தீட்டின் முடிவிலேயே தான் மூன்று நாள் தீட்டும் போகும்.பத்து நாள் தீட்டு காத்துக் கொண்டிருக்கும் பொழுது மூன்று நாள் தீட்டு வந்தாலும் பத்து நாள் தீட்டு அகலும்.
3. க்ஞாதி ஆசௌசத்தில் தாய் தந்தயைர் இறந்தால், பிள்ளைகளுக்கும், மனைவி இறந்தால் பர்த்தாவுக்கும், பர்த்தா இறந்தால் மனைவிக்கும், மைந்தன், பெண் இறந்தால் தாய் தகப்பன்களுக்கும் மரணம் முதல் பத்து நாள் ஆசௌசம் உண்டு. க்ஞாதி ஆசௌசத்தோடு இது போவதில்லை.

4. பத்து நாள் தீட்டில் பத்தாவது நாள் ராத்திரியில் வேறொரு பத்து நாள் தீட்டு வந்தால் இரண்டு நாளும், அன்று ராத்திரி நாலாவது யாமத்திலாவது அருணோதயத்திலாவது வந்தால் மூன்று நாட்களும் அதிக ஆசௌசமுண்டு.
5. பத்து நாள் தீட்டில் மூன்று நாள் தீட்டு எப்போது வந்தாலும் அதற்கு அதிக ஆசௌசமில்லை.
6. பிதா இறந்து பத்து நாளைக்குள் மாதா இறந்தால் பிதாவின் தீட்டுக்காலத்திற்கு மேல் பக்ஷிணீகால ஆசௌசம் அதிகமுண்டு.அன்னையின் பத்து நாட்களின் நடுவில் பிதா இறந்தால், பிதாவின் மரண தினம் முதல் பத்து நாள் ஆசௌசம் உண்டு.
7. பிதா இறந்த பத்தாவது தினத்தில் மாதா எப்போது இறந்தாலும் அதற்காக பக்ஷிண்யாசௌசந்தான் அதிகமில்லை.
8. தாய் தகப்பன் இறந்து பத்து நாளுக்குள் மனைவி, புத்ரன், புத்ரீ இவர்கள் இறந்தால் முந்திய ஆசௌசத்தோடு பிந்திய ஆசௌசம் அகலும்.பத்தாம் நாளில் இறந்தால் முன்கூறியபடி 2 அல்லது 3 நாள் அதிகமாக ஆசௌசம் உண்டு.
9. தாய், தகப்பன், பத்னி, பர்த்தா, பிள்ளை, பெண் இவர்கள் இறந்த பத்தாவது தினத்தில் வேறொரு ஞ்ஞாதி மரணம் ஏற்பட்டால் முந்திய தீட்டோடு பிந்திய தீட்டும் போய்விடும்.
10. பத்து நாள் ஆசௌசம் காத்துக்கொண்டிருக்கும் பொழுது, வேறொருவனைத் தகனஞ் செய்ய நேர்ந்தால் தகனதினம் முதல் பத்து நாள் ஆசௌசம். மறுபடியும் வேறு தகனஞ் செய்ய நேர்ந்தால் முன் ஆசௌசத்தோடு பிந்தியதும் போய்விடும்.
11. ஒரு மரணத் தீட்டு காத்துக் கொண்டிருக்கும் போது, அந்தத்தீட்டு ஆரம்பத்திற்கு முந்தியே ஒருவர் இறந்ததாக வேறு ஒரு தீட்டு வந்தால் பிந்திக் கேட்ட தீட்டின் முடிவிலேயே ஏற்கெனவே காத்துவரும் தீட்டும் போய்விடும்.

## அதிக்ராந்தாசௌசம்

*(தீட்டு நாட்களுக்குப் பிறகு தெரியும் தீட்டு)*

1. பத்து நாள் ஆசௌசத்தை பத்து நாட்களுக்குப் பின்பு மூன்று மாதங்களுக்குள் கேட்டால் மூன்று நாள் ஆசௌசம். ஆறு மாதங்களுக்குள் கேட்டால் பக்ஷிண்யாசௌசம். ஒரு வருடத்திற்குள் கேட்டால் ஒரு நாள் ஆசௌசம். பிறகு கேட்டால் ஸ்நானம் மாத்திரம் தான். தீட்டில்லை.

2. மூன்று நாள் ஆசௌசத்தை மூன்று நாளுக்குள்மேல் பத்து நாளுக்குள் கேட்டால் ஒரு நாள் ஆசௌசம். பத்து நாளுக்குப்பிறகு கேட்டால் ஸ்நானம் மட்டும்.
3. பக்ஷிணீ தீட்டை பக்ஷிணிக்குமேல் பத்து நாட்களுக்குள்கேட்டால் ஒரு காலம். அதாவது - பகலில் கேட்டால் பகல் மாத்திரம் தீட்டு. ராத்ரியில் கேட்டால் ராத்ரி மாத்திரமே தீட்டு. பிறகு கேட்டால் ஸ்நானம் மாத்ரம்.
4. இருபத்தைந்தாவது மாதம் முதல் ஆறாவது வருஷம் முடிவு வரையில் க்ஞாதியின் பிள்ளை இறந்தால், அவன் பூணூல் போடாதவனானால் மூன்று நாள் ஆசௌசம் உண்டு என்று சொன்னதற்கு அதிக்ராந்தாசௌசம் கிடையாது.
5. ஒரு நாள் தீட்டுக்கு அதிக்ராந்தாசௌசம் கிடையாது.
6. மாதா பிதாக்களின் மரணத்தில் மூத்த புத்ரனுக்கும், பர்த்தாவின் மரணத்தில் பத்தினிக்கும் எப்போது கேட்டாலும் பத்து நாள் ஆசௌசம் உண்டு.
7. ஸபத்னீ மாதாவின் மரணத்தை ஒரு வருஷம் சென்றபின் கேட்டால் மூன்று நாள் ஆசௌசம். ஒரு வருஷத்திற்குள் கேட்டால் பத்து நாள் தீட்டாம்.
8. மாதா பிதாக்களுக்கு மூத்த புத்ரனால் க்ருத்யங்கள் செய்யப்பட்டு பிறகு 2 வது முதலான பிள்ளைகள் ஒரு வருஷத்திற்கு மேல் கேட்டால் மூன்று நாள் ஆசௌசம்.
9. க்ருத்யம் செய்யப்பட்டிருந்தாலும் செய்யப்படாமலிருந்தாலும் மாதா பிதாக்களின் மரணத்தை மூத்த குமாரன் எப்போது கேட்டாலும் கேட்டது முதல் பத்து நாள் தீட்டுக் காத்து, ஸபிண்டீகரணம் முதலான எல்லாவற்றையும் செய்ய வேண்டியது.
10. சகோதர மரண விஷயத்தில் க்ருத்யம் செய்யப்படிருந்தால் ஆறு மாதத்திற்குள் கேட்டால் மூன்று நாள் ஆசௌசம். பிறகு கேட்டால் பக்ஷிணீ ஆசௌசம். க்ருத்யம் செய்யாத பக்ஷத்தில் க்ருத்யம் செய்யும் சகோதரனுக்கு எப்போதும் பத்து நாள் ஆசௌசம். மற்ற சகோதரர்களுக்கு ஆறு மாதத்திற்குள் பத்து நாட்களும், ஒரு வருஷத்திற்குள் கேட்டால் மூன்று நாட்களும் ஆசௌசம் உண்டு.
11. பத்து நாள் தீட்டை பத்தாவது நாள் இராத்திரியிலும், மூன்று நாள் தீட்டை மூன்றாவது நாள் ராத்திரியிலும் கேட்டால் தர்ப்பணம் செய்வதற்காக மறுநாளும் தீட்டுண்டு.
12. அதிக்ராந்தா சௌசம் காக்கும் பொழுது அவரது பொருள்களுக்குத் தீட்டில்லை.
13. அதிக்ராந்தா சௌசத்தில் வஸ்திரத்தால் செய்யும் வாஸோதகமில்லை.

14. அதிக்ராந்தா சௌசத்தில் பிறப்பு இறப்புத் தீட்டுகள் சேர்ந்தால், அதிக்ராந்தாசௌசத்தை சாதாரணமான தீட்டாக எண்ணி ஸஹஜ தீட்டுச் சேர்க்கையில் எந்த மாதிரியோ அதையே அனுஷ்டிக்க வேண்டியது.

## ஆசௌசமில்லாதவர்கள்

உபநயனம் ஆகாதவன், ப்ரம்மசாரி இவர்களில் ஒருவர்க்குக் கர்மா செய்தால், அந்த அந்த காலத்தில் நேரும் தீட்டைத் தவிர மற்ற தீட்டுகள் கிடையாது.

## சில பொதுவானவை

1. தீட்டு ஒருவனுக்கு உண்டு என்று தெரிந்து ஒருவன் (தீட்டிலாதவன்) தீட்டுடையவனுடைய வீட்டில் சாப்பிட்டால், உண்டவன் அன்று பூராவும் தீட்டைக் காக்க வேண்டும். மறுநாள் தான் தீட்டுப் போகும்.
2. தீட்டு போகும் நாளில் (ஸங்கவ காலம்) வந்த பின்பே சுமார் எட்டரை மணிக்கு மேல் தான் ஸ்நானம் செய்ய வேண்டியது.
3. பிறப்பு, இறப்பு, மாதவிடாய் இவைகள் சூரியோதயத்திற்கு 11 1/2 நாழிகைக்குமுன் ஏற்பட்டால் முதல் நாள் முதல் கணக்கு. பிறகு ஏற்பட்டால் மறு நாள் முதல் கணக்கு. அருணோதயம் முதல் கணக்கிடுபவர்களும் சிலர் உண்டு.
4. பிரேதத்தின் பின் போனாலும் க்ஷவரம் செய்து கொண்டாலும் இருமுறை ஸ்நானம் செய்ய வேண்டியது.
5. ஸந்யாஸிகள் தங்கள் முன் ஆஸ்ரம மாதா பிதாக்கள் இறந்ததாகக் கேட்டால் உடனே ஸாது ஸ்நானம் செய்ய வேண்டியது. மற்றவர்கள் எவராயினும் ஸ்நானம் இல்லை.
6. வேறு விதி (எண்பத்தெட்டு அடிக்குள் பிணம் இருந்தால் ஹோமம் சமையல் சாப்பாடு உண்பது முதலியன கூடாது.
7. ஸந்யாஸி இறந்து அவர் உடலிருந்தால் கிராமத்திற்குத்தீட்டுக் கிடையாது.
8. நான்காவது வர்ணத்தாரின் சவம் ஊருக்குள்ளே இருந்தால், அது இருக்கும் இல்லத்திற்கு மட்டும் தான் தோஷமுண்டு.
9. நானூறு அந்தணர்கள் உள்ள ஊரில் 11வில்கடை தூரத்தில் ஒரு பிராம்மணர் இறந்தால் தீட்டில்லை. அவ்வளவு தூரம் இல்லாவிட்டால்ம் ஒரு வாய்க்கால் மதகுகளால் பிரிக்கப்பட்டு வேறு வீதியில் இருந்தாலும் தோஷமில்லை.
10. ஆயிரம் பிராம்மணர்கள் உள்ள ஊரில் ஒரே தெருவாக இருக்கும் பக்ஷத்தில் 240 அடிக்கு மேற்பட்டால் தோஷமே இல்லை.

11. நகரங்களுக்கு அந்த மரணத்தால் ஏற்படும் தோஷமே இல்லை.
12. ஆசௌசமுள்ளவன் ஒருவன் பலத்த நோயினால் ஆசௌசம் போகும் தினத்தில் ஸ்நானம் செய்ய முடியாவிட்டால், அவனுக்காக வேறொருவன் பத்து தடவை ஸ்நானமும் ஆசமனமும் செய்ய வேண்டியது.

ஒவ்வொரு தடவயிலும் தீட்டுள்ளவனைத் தொட்டு விட்டு ஸ்நானம் செய்ய வேண்டியது.

ஒவ்வொரு தடவயிலும் ஆசௌசியானவன் வெவ்வேறு சுத்த வஸ்திரம் தரிக்க வேண்டியது. இப்படி செய்த பின்பு புண்யாஹவாசனமும் செய்தால் சுத்தனாகிறான். அவன் வபனம் செய்து கொள்ளவேண்டியவனாக இருந்தாலும் அது செய்து கொள்ள வேண்டிய அவசியம் இல்லை.

13. வீட்டிற்கு விலக்காகியிருப்பவள் நாலாவது நாளில் வியாதியினால் ஸ்நானம் செய்ய முடியாவிட்டால் வேறொரு ஸ்திரீ அவளை தொட்டுக் கொண்டு பன்னிரண்டு முறை ஸ்நானம் செய்ய வேண்டியது. ஒவ்வொரு தடவையிலும் ரஜஸ்வலை வேறு சுத்தமான புடவை தரிக்க வேண்டியது. பிறகு சக்தி அளவு தானம் செய்தல் வேண்டும். புண்யாஹவாசனத்தினாலும் சுத்தையாகி விடுகிறாள்.

## <u>தீட்டில்லாத காலங்கள்</u>

ஒருவன் சிராத்தம் செய்து கொண்டிருக்கும் பொழுது கடிதம் மூலமாகவோ பேச்சின் மூலமாகவோ ஆசௌசம் வந்ததாக அறிந்தால் சிராத்தம் ஆன பின்பே தான் அவனுக்குத் தீட்டு உண்டு. அதே போல் பிராம்மணர்களுக்குத் தீட்டு ஸம்பவிக்குமானால் சிராத்தம் ஸம்பூர்ணமான பிறகே தான் தீட்டுண்டு.

யஜமானன் பூணூலை இடமாக மாற்றிக் கொண்டு இறந்தவரது கோத்ரத்தையும் பெயரையும் ஸம்பந்தத்தையும் கூறி விதிப்படி பார்வண விதாநேந அத்யகரிஷ்யே என்று ஸங்கல்பம் செய்த பிறகு ச்ராத்த கர்த்தாவுக்கு ஆசௌசம் நேர்ந்தால் சிராத்தம் முடியும் வரையில் தீட்டில்லை. பவதாக்ஷண: கர்த்தவ்ய: என்ற பிறகு போக்தாவுக்கு ஆசௌசம் நேர்ந்தால் விஸர்ஜனமாகும் வரையில் அவருக்குத் தீட்டில்லை.

ஸங்கல்பமானபின் விவாகத்தில் சேஷ ஹோமம் முடியும் வரை புதிய தம்பதிக்குத் தீட்டில்லை. நடுவில் மாதா பிதாக்களின் மரணம் நேர்ந்தால் அந்தக் கர்மாவைச் செய்து விட்டு சேஷ ஹோமம் செய்ய வேண்டும். தம்பதிக்களுக்குள் பெண்ணுக்கோ புருஷனுக்கோ மரணம் ஏற்பட்டால் சேஷ ஹோமம் வரையில் செய்துவிட்டுப் பிறகு தகனம் செய்ய வேண்டியது.

யாக தீக்ஷையின் மத்தியில் மாதா பிதாக்களின் மரணம் நேர்ந்தால் பல பிள்ளைகள் இருந்தால் மற்ற பிள்ளைகளைக் கொண்டு கர்மாவைச் செய்ய வேண்டியது. ஒரே பிள்ளையானால் தீக்ஷக்கானமான் தோல், வஸ்திரம் முதலியவைகளை வைத்து விட்டு ஸம்ஸ்காரம் செய்ய வேண்டியது.ஸ்நானம் செய்யக்கூடாது. பிறகு யாகசாலைக்கு வந்து தீக்ஷா பொருள்களை மந்த்ரம் கூறி சுத்தி செய்து தரிக்க வேண்டியது.

## சிற்சில ஸாரமான விஷயங்கள்

1. ஸந்யாஸியின் மரணத்தினால் க்ஞாதிகளுக்குத்தீட்டில்லை. ஸ்நானம் மட்டும். அஃதும் அவபிருதம் என்னும் மங்கள ஸ்நானம்.
2. மாப்பிள்ளை இறந்தால், மாமனார் மைத்துனர், மாமியார் இவர்களுக்குத் தீட்டில்லை. ஸ்நானம் மட்டும் உண்டு.
3. ராஜாங்கத்தாரால் கொலைதண்டனை விதிக்கப்பட்டவனுக்கு உடனே கர்மம் செய்யலாம். துர்மரணம் உள்ளவரைப்போல ஆறு மாதம் காக்க வேண்டாம்.
4. தெய்வாதீனமாய்த் துர்மரணம், அடைகிறவனுக்குத்தீட்டு, தர்ப்பணம் முதலியவை எல்லாம் உண்டு. வேணுமென்றே தற்கொலை செய்து கொண்டு இறப்பவனுக்கு இவைகள் கிடையாது.
5. ஜாதியை விட்டகன்றவன். பர புருஷனை நாடிச் சென்றவள் இவர்கள் விஷயத்தில், அவர்களை மந்த்ரம் இல்லாமல் கொளுத்திவிட்டு, ஒரு வருஷமோ அல்லது ஆறு மாதமோ கழித்து, நாராயண பலி செய்துவிட்டு, மூன்று நாள் தீட்டுக்காத்து, கர்மாக்கள் செய்ய வேண்டியது. துர்மரணம் செய்து கொண்டவனுக்கும் அவ்வாறே க்ஞாதிகளுக்குத்தீட்டு கிடையாது.
6. துர்மரணம் அடைந்தவன் விஷயத்தில் க்ஞாதிகளுக்கு ஸ்நானத்தால் சுத்தி. ஒரு வருஷம், ஆறு மாதம், மூன்று மாதம் கழித்து நாராயண பலி செய்து, மூன்று நாள் தீட்டுக் காத்து, இரண்டாவது நாள் ஸஞ்சயனம், மூன்றாவது நாள் உதகதானம், நான்காவது நாள் சிராத்தம் செய்ய வேண்டியது.

7. உடல் நிலையற்றது. கர்மா செய்பவன் நீண்ட நாளிருப்பது நிச்சயமில்லை. ஆகவே தூர்மரணமடைந்தவனுக்கு 24 நாள் சென்ற பின்பே கர்மா செய்யலாம். இதனிடையில் தாய் தந்தையர்களின் மரித்த தினம் வந்தால் சிராத்தம் செய்து விட்டுப் பிறகு கர்மா செய்ய வேண்டும். மற்றவர்கள் சிராத்தமானால் பிந்தியே செய்ய வேண்டும்.
8. க்ருத்தியம் செய்பவனுக்கு ஏகோத்திஷ்டத்தின் முடிவில் தான் தீட்டுப் போகும்.
9. விவாகமான பெண் இறந்தால் அவள் பிறந்த வீட்டு க்ஞாதிகளுக்குத் தீட்டில்லை.
10. ஜனனத் தீட்டைக் காப்பவனை நாலு நாட்களுக்கு மேல் தொட்டால் அதிக தோஷமில்லை.
11. இரட்டையாகப் பிறந்தால் தகப்பனைப் பத்து நாட்கள் வரைத் தொடலாகாது. மரண ஆசௌசம் உள்ளவரைத் தொடலாகாது. தெரியாமல் தொட்டால் ஸ்நானம் செய்ய வேண்டியது. வேண்டிமென்று ஸ்பர்சித்தால் பிராயச்சித்தமுண்டு.
12. ஆசௌசமுள்ளவன் வேறு ஆசௌசமுள்ளவரையும் தொடலாகாது.
13. ஆசௌசமுள்ளவன் வீட்டிற்கும் அவன் சாமாங்களுக்கும் தீட்டுண்டு.
14. வழிப்போக்கன், நண்பன் இவர்கள் வீட்டில் பிரஸவித்தாலும், மரித்தாலும் அவ்வீட்டிற்கு தீட்டில்லை. ஆனால் அந்த வீட்டில் ப்ரேத க்ருத்யம் நடந்தால் தீட்டுண்டு.
15. பிரம்மசாரிகளை க்ருதயம் செய்தாலொழிய உதக தானம் செய்யக்கூடாது.
16. விவாக தீக்ஷை, யாக தீக்ஷை இவைகளின் மத்தியில் மரண ஆசௌசம் கேட்கப்பட்டால் தீக்ஷை முடிந்தபின் பாக்கி நாள் தீட்டுண்டு. தீக்ஷையின் முடிவிற்குள் ஆசௌசகாலம் நீங்கி விட்டால் பிறகு அதிக்ராந்தாசௌசம் உண்டு.
17. உபநயனம் ஆகாதவன் மரணத்தில் தாய், தந்தை, உடன் பிறந்தவர்களைத் தவிர மற்ற எல்லா உறவினர்களுக்கும் அதிக்ராந்தாசௌசம் கிடையாது.
18. கர்ப்ப தீக்ஷை உள்ளவன் தானம் வாங்தல், தூர யாத்திரை முதலியவகளைஸ் செய்தல் கூடாது.
19. சவத்தின் முன்புறமும் பக்கமாகவும் போகக்கூடாது.
20. க்ஞாதியில்லாதவன் (நண்பன்) சவத்திற்குப் பின் சென்றால், ஸ்நானம் செய்து உலர்ந்த வஸ்திரமணிந்து அக்னியைத் தொட்டு, நெய்யைக் கொஞ்சம் சாப்பிட்டு, மூன்று பிராணாயாமம் செய்து, மறுபடியும் ஸ்நானம் செய்ய வேண்டும்.

21.மயானத்திற்குச் சென்று விட்டு, ஸ்நானம் செய்யாமல் ஊருக்குள் போகக் கூடாது.

22.தாயாதிகள் அல்லாதவர்கள் க்ரியை துவங்குவதற்கு முன்னேயே ஸ்நானம் செய்தால் சுத்தர்களாவார். க்ரியை ஆரம்பித்து விட்டால் தகனமான பிறகே ஸ்நானம் செய்ய வேண்டும்.

23.ஸஞ்சயனத்திற்கு பின்னால் துக்கம் விசாரித்தால் ஆசமனம் செய்தால் போதும். துக்கம் விசாரித்தவர் அன்று சிரார்த்தம், தானம் முதலியவை செய்யக்கூடாது. அதனால் சிரார்த்த தினத்தன்று துக்கம் கேட்கக் கூடாது.

24.க்ஞாதியில்லாத ஒரு சவத்தைப் பகலில் சுமந்தால் பகல் முழுவதும், ராத்திரி சுமந்தால் இரவு முழுவதும் ஊருக்கு வெளியில் உபவாசமிருந்து பிறகு ஸ்நானம் செய்து பஞ்சகவ்யம் சாப்பிட வேண்டும். பிராம்மணர்களால் புண்யாஹவாசனம் செய்து கொள்ளவேண்டும்.

25.பழைய பிணம், தூரஸ்திரீ சவம், ப்ரஸவித்தவளுடைய சவம், கர்ப்பிணீ சவம் இவைகளை க்ஞாதியில்லாதவன் சுமந்தால் பஞ்சகவ்யம் சாப்பிட்டு, பசுவிற்குப் புல் வாங்கிப் போட்டு, தனக்கு சக்தியுள்ள மட்டும் காயத்ரீ ஜபம் செய்து, நெருப்பைத் தொட்டு, நெய்யையும் கொஞ்சம் சாப்பிட்டு, பூணூலும் வேறு தரித்து, புண்யாஹவாசனம் செய்து கொள்ளவும் வேண்டும். அதுவரை அவன் சந்த்யாவந்தனங்கூட செய்ய யோக்யதை இல்லை.

26.தன் பத்தினி கர்ப்பமாயிருக்கையில் பிணத்தை சுமக்கலாகாது. ஆயினும் தன்னுடைய தகப்பன், தாய், பிள்ளையில்லாத சகோதரன், புத்ரனில்லாத மாமன் இவர்களாது சவத்தை சுமக்கலாம்.

27.விவாகமாகாதவன், பிரம்மசாரி, தாய், தகப்பன் சவத்தை தவிர மற்றவர் சவங்களை சுமக்கக் கூடாது.

28.அநாதையான ஒரு பிராம்மணனது சவத்தைச் சுமந்தால் ஸ்நானம் செய்து, நெய்யைச் சாப்பிட்டு, அக்னியைத் தொட்டு, பிராணாயாமம் செய்து, வேப்பிலையைத் தின்று உமிழ்ந்தால் சுத்தனாகி விடுகிறான்.

29.தீட்டுக்காரர் ஆலயத்திற்கு போகக்கூடாது.

30.தீட்டுக்காரர் தீட்டிலாதவர்களையும், தீட்டில்லாதவர் தீட்டுக்காரர்களையும் நமஸ்காரம் செய்யக்கூடாது.

31.ஜனன மரண ஆசௌசம் இரண்டிலும் ஏகாதசி, த்வாதசி விரதத்தை விடக் கூடாது. உபவாசம் இருக்க வேண்டும். பூஜை கிடையாது.

32.சாவு தீட்டுக்காரர் தினம் தினம் சிரஸ் ஸ்நானம் செய்ய வேண்டும். பூமியிலேயே படுக்க வேண்டும். கட்டில் மெத்தைகளில் படுக்கக் கூடாது.

33.சிசுக்கள் இறந்து புதைத்த தினம் முதல் தான் தீட்டைக் காக்க வேண்டியது. இறந்த தினத்திலிருந்து அல்ல.

34.யாகம் செய்தவர் இறந்தால், அவர் உடலைக் கொளுத்திய தினம் முதலே தீட்டைக் காக்க வேண்டும்.

******************

1. இறந்தவர் பெரியவரானால் வபனம் உண்டு.
2. சின்னவர் இறந்தால் வபனமில்லை.
3. பத்தாவது நாள் வெள்ளிக்கிழமையானால் ஜீவ பித்ருக்களுக்கு யாரிறந்தாலும் வபனம் இல்லை.
4. ஒன்பதாவது நாளிலே வபனம் செய்து கொள்க.
5. க்ஞாதிகளல்லாத சிலருக்கும் வபனம் உண்டு.
6. மாதாமஹன், மாதாமஹீ, மாமன், மாமி, மாமனார், மாமியார் இறந்தால் வபனம் உண்டு.
7. இறந்தவர் பெரியவரா இல்லையா என சந்தேகமானால் வபனம் செய்து கொள்வதே சிறந்தது.
8. மூன்று நாளிலும் மூன்றாவது நாள் வெள்ளிக்கிழமையானால் முதல் நாளே வபனம்.
9. மூன்று நாள் தீட்டுள்ள க்ஞாதிக்கு வபனம் இல்லை.
10. அதிக்ராந்தாசௌசத்திலும் வபனம் உண்டு.
11. தீட்டித் தர்ப்பணத்தை வீட்டில் செய்யக் கூடாது.
12. இறந்த திதி தெரியாவிட்டால் கிருஷ்ணபக்ஷ அஷ்டமி, ஏகாதசி, அமாவாஸ்யை இவைகளில் செய்யலாம்.
13. மாதம் தெரியாவிடில் ஆடி, புரட்டாசி, மாசி இவைகளில் ஒன்றினில் திதி செய்யலாம்.

## ஸ்ரார்த்த சம்பந்தமான சில விஷயங்கள்

1. திதி 12 மணிக்கு மேல், என்று அதிக நாழி உள்ளதோ அன்று ஸ்ரார்த்தம் பண்ண வேண்டும்.
2. இரண்டு நாட்களிலும் சமமாக இருந்தால் முதல் நாள் பண்ண வேண்டும்.
3. ஒரு மாதத்தில் 2 திதிகள் வந்தால் பிந்தியதில் பண்ண வேண்டும்.
4. பின் திதியில் மாதப்பிறப்பினால் முன் திதியில் செய்ய வேண்டும்.
5. ஸங்க்ரமணம் முன் பகலிலோ அர்த்த ராத்ரிக்குப் பிறகோ ஏற்பட்டால் அன்று தோஷமில்லை.
6. ஆசௌசம் ஏற்பட்டால் தீட்டுப் போன தினத்தில் பண்ண வேண்டும்.
7. மறதியினால் அல்லது வேறு தவிர்க்க முடியாத காரணத்தால் ச்ராத்தம் நின்றால், க்ருஷ்ணபக்ஷ ஏகாதசி அல்லது அமாவாஸ்யையில் பண்ண வேண்டும்.
8. ப்ராம்ஹணர்கள் வராமல் போனால் வேறு யாரும் கிடைக்காவிட்டால் அன்று உபவாஸம் இருந்து மறுநாள் பண்ண வேண்டும்.
9. ஸ்த்ரீகள் பண்ணும் ச்ராத்தமானால் அவர்களுக்கு மாதவிடாய் ஏற்பட்டுவிட்டால் 5 வது நாள் பண்ண வேணும்.
10. ச்ராத்தத்தில் ஸபிண்டஸமானோதர்களை (க்ஞாதிகள்) ப்ராம்மணார்த்தம் சொல்லக்கூடாது.
11. அப்பாவும் பிள்ளையும் ப்ரதாக்களும் ஒரே தினத்தில் ப்ராம்மனார்த்தம் இருக்கக்கூடாது.
12. ச்ரார்த்தத்திற்கு மூன்று நாள் முதலாவது வெளியில் சாப்பிடக் கூடாது. ஆசார்யன், அம்மான், தங்கை, தமக்கை, மாமனார் மாமியார் ஆகியவர்களின் அன்னம் ப்ரான்னமாகாது.
13. நெய் அல்லது நல்லெண்ணையில் தான் தளிகை பண்ண வேண்டும். கடலெண்ணெய் முதலியன கூடாது.
14. துவரை, கடலை, பூஷணி, எலுமிச்சை, மிளகாய், மோர் இவை ஆகாது.
15. தாயார் தகப்பனார் ச்ராத்தமானால் பரேஹநி தர்ப்பனம் மறுநாள் காலையில் பண்ண வேணும். ஒரு வர்க்கத்திற்கு தான் தர்ப்பணம்.
16. அமாவாஸ்யை மாதப்பிறப்பு ஒன்றாக வந்தால் ஸங்க்ரமணத்தைத்தான் பண்ண வேண்டும்.
17. அமாவாஸ்யையன்று ச்ரார்த்தம் வந்தால் ப்ரத்யாப்திகம் பண்ண பிறகு தர்ப்பணம் பண்ண வேண்டும்.

18. ஸங்க்ரமணமானால் அதை முதலில் பண்ணிவிட்டு ச்ரார்த்தம் பண்ணவும்.

19. ஸபிண்டீகரணம் ஆகிவிட்டால் எல்லா தர்ப்பணங்களையும் பண்ண வேண்டும்.

20. அமாவாஸ்யை, மாதப்பிறப்பு, யுகாதி, அஷ்டமி, சதுர்தசி, பூர்ணிமைகளில் இரவில் பலகாரம் தான் பண்ண வேண்டும்